# சிவநாமாவள்யஷ்டகம்

(நாமாவளிகளைக் கொண்ட எட்டுச் சுலோகங்களாதலால் ‘நாமாவள்யஷ்டகம்' எனப்பட்டது.)

**ஹே சந்த்3ரசூட3 மத3நாந்தக சூலபாணே**
**ஸ்தா2ணோ கி3ரீச கிரிஜேச மஹேச சம்போ4 ।**
**பூ4தேச பீ4தப4யஸூத3ன மாமநாத2ம்**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 1

சந்திரனைத் தலையில் சூடியவரே, காமனை அழித்தவரே, சூலத்தைத் தரித்தவரே, அசைவற்றவரே, மலையில் வசிப்பவரே, மலைமகளின் கணவரே மஹேச்வரரே, இன்பங்கள் எல்லாவற்றிற்கும் பிறப்பிடமான சம்புவே, பூதங்களின் தலைவனே, பயத்தைப் போக்குபவரே, உலகிற்கெல்லாம் ஈசனே, நாதனற்ற என்னை பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் காக்க வேண்டும்.

**ஹே பார்வதீஹ்ருத3 யவல்லப4 சந்த்3ரமௌலே**
**பூ4தாதி4ப ப்ரமத2நாத கி3ரீசசாப ।**
**ஹே வாமதே3வ ப4வ ருத்3ர பிநாகபாணே**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 2

பார்வதியின் மனத்திற்கு இசைந்தவரே. சந்திரனை முடியில் சூடியவரே, பூதங்களுக்கும் ப்ரமத கணங்களுக்கும் அதிபரே, மேருவை வில்லாகக் கொண்டவரே, மிக அழகுவாய்ந்த தெய்வமே, எங்கும் சத்ரூபியாய் நிறைந்த பவரே, துக்கத்தையும் அதன் காரணத்தையும் அழிக்கும் ருத்ரரே. பினாகத்தை தரித்தவரே, உலகிற்கெல்லாம் ஈசரே, என்னை ஸம்ஸார துக்கக் காட்டினின்றும் காக்க வேண்டும்,

**ஹே நீலகண்ட2 வ்ருஷப4த்4வஜ பஞ்சவக்த்ர**
**லோகேச சேஷவலய ப்ரமதே3ச சர்வ ।**
**ஹே தூ4ர்ஜடே பசுபதே கி3ரிஜாபதே மாம்**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 3

கருத்த கழுத்தையுடைய நீலகண்டரே, காளையைக் கொடியாகக் கொண்டவரே, ஐந்து முகமுள்ளவரே, உலகத்திற்குப் பதியே, ஆதிசேஷனை வளையாகத் தரித்தவரே, ப்ரமத கணங்களின் தலைவரே. பாபங்களைப் போக்குபவரே, அசைக்கப்பட்ட ஜடையை உடையவரே, உயிர்களின் தலைவா, மலைமகளின் பதியே, உலகிற்கெல்லாம் ஈசரே, என்னை பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் காக்க வேண்டும்.

**ஹே விச்வநாத2 சிவசங்கர தே3வதே3வ**
**க3ங்கா3த4ர ப்ரமத2 நாயக நந்தி3கேச ।**
**பா3ணேச்வராந்த4 கரிபோ ஹர லோகநாத2**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 4

விச்வநாதரே, சிவபெருமானே, சங்கரனே, தேவ தேவா, கங்காதர, ப்ரமத நாயகரே, நந்திகேச, பாணனுக்கு ஈசரே, அந்தகனைக் கொன்றவரே, ஹர, உலகத்திற்கு நாதரே, ஜகதீச, நாதனற்ற என்னை பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் காக்க வேண்டும்.

**வாராணஸீபுரபதே மணிகர்ணிகேச**
**வீரேச த3க்ஷமக2கால விபோ4 க3ணேச ।**
**ஸர்வஜ்ஞ ஸர்வ ஹ்ருத3யைகநிவாஸ நாத3**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 5

காசிப் பட்டினத்திற்குத் தலைவரே, (காசியிலுள்ள) மணிகர்ணிகைக்கு நாயகரே, வீரர்களுக்கு ஈசனே, தக்ஷனின் யாகத்தை அழித்தவரே, எங்கும் பரவிய விபுவே, கணங்களுக்கு அதிபரே, எல்லாமறிந்தவரே, எல்லா இதயங்களிலும் குடிகொண்ட ஒன்றே, நாதனற்ற என்னை பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் காக்கவேண்டும்.

**ஸ்ரீமன்மஹேச்வர க்ருபாமய ஹே த3யாளோ**
**ஹே வ்யோமகேச சிதிகண்ட2 க3ணாதி4நாத2 ।**
**ப4ஸ்மாங்க3ராக3 ந்ருகபாலகலாபமால**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 6

திருவுடைய மகேசா, கருணையுருவமே, தயாளுவே, ஆகாயத்தை அளாவும் கேசம் உள்ளவரே, கறுத்த கண்டமுள்ளவரே, கணங்களின் அதிபரே, விபூதியை மேனிப் பூச்சாக அணிந்தவரே, மனித கபாலங்களைக் கழுத்துக்கு மாலையாக அணிந்தவரே, என்னை பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் காக்க வேண்டும்.

**கைலாஸ சைல விநிவாஸ வ்ருஷாகபே ஹே**
**ம்ருத்யுஞ்ஜய த்ரிநயன த்ரிஜக3ந்நிவாஸ ।**
**நாராயணப்ரிய மதா3பஹ சக்திநாத2**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ3ச ரக்ஷ ॥** 7

திருக்கயிலாய மலையில் வசிப்பவரே, வ்ருஷாகபி எனப்படுபவரே, எமனை வென்றவருக்குப் பிரியமானவரே, முக்கண் படைத்தவரே, மூலகத்திலும் வசிப்பவரே, நாராயணனுக்குப் பிரியமானவரே, மதத்தைப் போக்குபவரே. பராசகதியின் பதியே, என்னைப் பிறவி யென்னும் துக்கக் காட்டினின்றும் காக்கவேண்டும்.

**விச்வேச விச்வப4வநாசக விச்வரூப**
**விச்வாத்மக த்ரிபு4வனைக கு3ணாதி4கேச ।**
**ஹே விச்வநாத2 கருணாமய தீ3னப3ந்தோ**
**ஸம்ஸார து3:க2 க3ஹனாஜ்ஜக3தீ2ச ரக்ஷ ॥** 8

உலகத்திற்கு அதிபரே, உலகின் பிறவிப் பிணியைப் போக்குபவரே, உலகத்தையே உருவமாய்க் கொண்டவரே, உலகின் ஆன்மாவே, மூவுலகத்திலும் மிகவும் குணமுள்ள ஈசரே, உலக நாதனாயும் கருணையுரு வாயும், தீனருக்கு பந்துவாயுமுள்ளவரே, பிறவியென்னும் துக்கக் காட்டினின்றும் என்னைக் காக்க வேண்டும்.

**கௌ3ரீவிலாஸ ப4வனாய மஹேச்வராய**
**பஞ்சானனாய சரணாக3த கல்பகாய ।**
**சர்வாய ஸர்வஜக3தாம் அதி4பாய தஸ்மை**
**தா3ரித்3ர்ய து2:க2 த3ஹனாய நம : சிவாய ॥** 9

பார்வதியின் கேளிக்கைகளுக்கு உறைவிடமாயிருப்பவனும், மகேசுவரனும், ஐந்து முகங்களோடு கூடியவனும், சரணடைந்தோர் வேண்டியதைக் கொடுப்பவனும், தீமையை ஒழிப்பவனும், அனைத்துலகங்களுக்கும் தலைவனும், ஏழ்மையால் ஏற்படும் துக்கங்களைப் பொசுக்குகின்றவனுமான சிவனுக்கு வணக்கம்.

